[24th March 1961

*Agricultural implements*

***1065 Q.**—**Sri V. SUBBIAH**: கனம் உள் துறை அமைச்சர் தயவு செய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) அரசினரால் இரும்பு, உருக்கு கோட்டா அனுமதிக்கப்பட்டுள்ள தனிப்பட்ட வியாபாரிகளிடமிருந்து விவசாயக் கருவிகளைப் பெற விவசாயிகள் மிகவும் அவதிப்படுகிறார்கள் என்பது அரசினருக்குத் தெரியுமா ?

(இ) தெரியுமானால், அதன்மீது எடுத்துக்கொண்ட நடவடிக்கை என்ன ?

The Hon. Sri M. BHAKTAVATSALAM: (*a*) No, Sir.

(*b*) Does not arise.

Sri V. SUBBIAH: மண்வெட்டி, கடப்பாரை, சால், கூனைபட்டை போன்ற விவசாயக் கருவிகள் இப்போது பணம் இருந்தாலும் கிடைப்பது கஷ்டமாக இருக்கிறது. ஆகையால் தனிப்பட்டவர்களுக்குக் கொடுக்காமல் கூட்டுறவு மார்க்கெட்டிங் சொஸைட்டி, பஞ்சாயத்து யூனியன் கவுன்சில் போன்றவைகளுக்கு கொடுக்கும் உத்தேசம் உண்டா ?

The Hon. Sri M. BHAKTAVATSALAM: கூட்டுறவு சங்கங்கள் இருந்தால் அவர்களுக்கு முதல் ஸ்தானம் கொடுக்கப்படுகிறது. இல்லாத இடத்தில் தனிப்பட்ட அங்கீகரிக்கப்பட்ட ஃபேப்ரிகேட்டர்கள் மூலமும் கொடுக்கப்படுகிறது. இது கருவிகள் பற்றியது. இரும்புக்குத்தான் அது. விவசாயிகளுக்கு 100-க்கு 50 வீதம் சலுகையும் காட்டப்படுகிறது வட்டார வளர்ச்சிப் பிராந்தியங்களில். இப்போது மற்றொரு திட்டமும் பரிசீலிக்கப் பட்டு வருகிறது மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்திலே. அதன்படி மான்யமும் கடனும் கொடுப்பது என்று யோசனை. வருஷத்திற்கு 4 லட்ச ரூபாய் செலவு செய்ய ஒரு திட்டம் பரிசீலனையில் இருக்கிறது. வட்டார வளர்ச்சி இல்லாத பிராந்தியங்களில் கூட விவசாயிகளுக்கு சுலபமாகக் கிடைக்க இப்போது கவனம் செலுத்தப்பட்டு வருகிறது.

Sri V. K. RAMASWAMY MUDALIYAR: I talk from practical experience. In spite of the answer given by the Hon. Minister, still these things are not easily available. May I request the Hon. Minister to institute again another enquiry to find out the causes of delay in the supply of these things?

The Hon. Sri M. BHAKTAVATSALAM: Enquiry is not necessary. There is still shortage. There is difficulty. The situation is improving now and I do hope we will be able to have better supply so that this difficulty might be removed.

Sri V. K. KOTHANDARAMAN: ஸார், முதல் சலுகை, இரண்டாவது, மூன்றாவது என்றில்லாமல் எப்படி உர வினியோகத்தில் ஊழல் ஏற்பட்ட காரணத்தினால் தனியாருக்கு இல்லாத முறையில் கூட்டுறவு சொஸைட்டிகளுக்கு ஒப்படைக்கப்பட்டிருக்கிறதோ அதே போன்று இதையும் கூட்டுறவு சொஸைட்டிகளுக்கு ஒப்படைக்க ஏற்பாடு செய்யப்படுமா ?

The Hon. Sri M. BHAKTAVATSALAM: உரம் அப்படியே வினியோகிக்கப்படுவது. அதை யார் வேண்டுமானாலும் செய்யலாம். இப்போது கூட்டுறவு சங்கங்களுக்குக் கொடுக்கப்பட்டது. ஃபேப்ரிகேட்டிங் என்பது டெக்னிக்கல் விஷயம். எல்லா கூட்டுறவு சங்கங்களும் இதை எடுத்துச் செய்ய தயாராக இருப்பார்கள் என்று சொல்ல முடியாது. அது தான் கஷ்டம்.

24th March 1961]

SRI R. SRINIVASA IYER: ஸார், ∴பேப்ரிகேட்டர்ஸ் என்று லைஸென்ஸ் வாங்கிக்கொண்டு இரும்பு ரா மெட்டீரில் வாங்கி ∴பேப்ரிகேட் செய்யாமல் கம்பியாக இருந்தால இரண்டாக வெட்டி, வேறு மற்றவைகளாக இருந்தால் அப்படியே ப்ளாக் மார்க்கெட்டில் விற்றுவிடுகிறார்கள். அதனால் தான் அக்ரிகல்சரல் இம்ப்ளிமெண்ட்ஸ் கிடைக்கவில்லை. லைஸென்ஸ் வைத்திருப்பவர்கள் வாங்கும் சாமானை ∴பேப்ரிகேட் செய்கிறார்களா என்று விசாரிக்க ஏற்பாடு செய்ய முடியுமா?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: இதில் கைத்தொழில் இலாகா அப்போதைக்கப்போது பரிசீலனை செய்து வருகிறது. அது மாத்திரம் போதாது. மக்களிடத்தில் விழிப்பு வேண்டும். சட்ட மன்ற உறுப்பினர்களும் இதைப்பற்றி கண்காணித்து யாராவது தவறு செய்தால் அந்த மாதிரி ஒன்றிரண்டு கேஸ்களை அரசாங்கத்தின் கவனத்திற்குக் கொண்டு வந்தால் கண்டிப்பாக நடவடிக்கை எடுத்துக்கொள்ளப்படும். அதன் மூலமாக நிலைமை மாறலாம்.

*Oil resources*

* 1066 *Q.*—SRI T. S. RAMASWAMI (on behalf of SRI T. T. DANIEL): Will the Hon. the Minister for Industries be pleased to state—

(*a*) whether any survey was conducted to explore oil in the Kanyakumari district; and

(*b*) if so, when and the results thereof?

THE HON. SRI R. VENKATARAMAN: (*a*) No, Sir.

(*b*) Does not arise.

* 1067 *Q.*—SRI A. VEDARATHNAM: கனம் கைத்தொழில் அமைச்சர் தயவு செய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) காவிரி நதியின் ஓரத்தில் எண்ணெய் வள ஆராய்ச்சி சம்பந்தமாக இந்திய சர்க்காருக்கு ருமேனிய நிபுணர்களை அளித்து உதவத் தயாராய் இருப்பதாக, அந்த நாட்டு வர்த்தக மந்திரி கூறியிருப்பதை இந்திய சர்க்கார் ஏற்றுக்கொண்டிருக்கிறார்களா? இல்லையானால் காரணமென்ன?

(இ) வேறு எந்த நாட்டின் உதவியாவது நமக்கு இந்த ஆராய்ச்சிக்குக் கிடைத்திருக்கிறதா? அதன் விவரமென்ன?

THE HON. SRI R. VENKATARAMAN: (*a*) & (*b*) The Government have no information in the matter.

SRI A. VEDARATHNAM: ஸார், இப்போது இந்த எண்ணெய் வள ஆராய்ச்சியை நடத்தி வருவது எந்த நாட்டினரால்? ருமேனிய அரசாங்கத்தார் இந்த விஷயத்தில் நமக்கு உதவி புரிவதாகக் கோரியதை நம்மிடம் நேரே கேட்கவில்லை என்றால், மத்திய அரசாங்கத்தின் மூலமாக அணுக வேண்டிய காரணத்தால், அவர்களை அணுகி என்ன சொன்னார்கள் என்ற விஷயமாவது இந்த அரசாங்கத்திற்குத் தெரியுமா? அவர்கள் இதைப்பற்றி ஏதாவது கேட்டு அறிந்து கொண்டார்களா? 9-30 a.m.

THE HON. SRI R. VENKATARAMAN: இப்போது காவேரி நதி பேசினிலே ஆராய்ச்சியை நம்மவர்கள் செய்கின்றார்கள். ருமேனியா அரசாங்கத்தைப் பற்றிய விவரம் இந்த ராஜ்ய சர்க்காருக்குக் கிடையாது.

SRI K. VINAYAKAM: Sir, may I know from out of the researches made so far has it ever been established that there are oil resources in the Cauvery Basin?